# இயேசுவின் ஒளி

ஆண்டுச் சந்தா
ரூ. 50/-

மலர் - 7 பிப்ரவரி 2021 இதழ் - 10

வாக்குத்தத்தம் :
**நான் உன்னை முத்திரை மோதிரமாக வைப்பேன்.** (ஆகாய் 2:23)

## நீ முத்திரை மோதிரம்

சகோ. G. சுதாகர் டேவிட், M.A.(Eco), M.A.(His), B.Ed., B.P.Ed.,
S/o. (Late) Prof. G. குருபாதம்

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே!

இயேசு கிறிஸ்துவின் இனிய நாமத்தில் வாழ்த்துக்கள்.

**"நீ விசித்திரமாய் செய்யப்பட்ட முத்திரை மோதிரம். நீ ஞானத்தால் நிறைந்தவன்(ள்) பூரண அழகுள்ளவன்(ள்)"** (எசேக்கியேல் 28:12பி)

ஆண்டவர் நம் எல்லாரையும் தம்முடைய ஊழியக்காரராக்கி நம்மை முத்திரை மோதிரமாக வைப்பேன் என்று சொல்லுகிறார்.

### யோசேப்புக்கு கிடைத்த முத்திரை மோதிரம் (ஆதி 41:42)

பார்வோன் தன் கையில் போட்டிருந்த தன் முத்திரை மோதிரத்தை கழற்றி அதை யோசேப்பின் கையிலே போட்டான். இந்த மேன்மை யோசேப்பின் நல்ல குணங்களால் அவனுக்கு கிடைத்தது. யோசேப்பு எப்பொழுதும் தேவனுடைய பிரசன்னத்தை உணர்ந்து, அனுபவித்து வாழ்ந்தவர். யாரையும் மயக்கும் சோதனையை வென்ற பரிசுத்த வீரர். தன் எஜமானின் மனைவியின் தவறான எண்ணத்துக்கு தப்பி அவனோ தன் வஸ்திரத்தை அவள் கையில் விட்டு வெளியே ஓடிப்போனான் (ஆதி 39:12). சிறைச்சாலையில் இருந்து தேவனை மகிமைப்படுத்தி அரசாள்வதற்கு அழைக்கப்பட்டவர். தேவனுக்கு உண்மையான சாட்சி (ஆதி 39:9). சகோதரர்களை மனப்பூர்வமாய் மன்னித்தவர். தன் தகப்பனால் யோசேப்பு கனி தரும் செடி. அவன் நீருற்றண்டையில் உள்ள கனி தரும் செடி. அவன் கொடிகள் சுவரின் மேல் படரும் (ஆதி 49:22) என்று சாட்சி பகரப்பட்டவர். இயேசுவுக்கு முன் அடையாளமாக 20 வெள்ளிக் காசுகளுக்கு விற்கப்பட்டவர்.

பிரியமானவர்களே, யோசேப்பின் நற்குணங்களை நாம் பின்பற்றினால் தேவன் நம்மை முத்திரை மோத்திரமாக வைப்பார்.

### எஸ்தருக்கு கிடைத்த முத்திரை மோதிரம்

**"எஸ்தருக்குத் தன்னைக் காண்கிற எல்லார் கண்களிலும் தயை கிடைத்தது"** (எஸ்தர் 2:15). **"ராஜா சகல ஸ்திரீகளைப் பார்க்கிலும் எஸ்தர் மேல் அன்பு வைத்தான்.... அவன் ராஜ கிரீடத்தை அவள் சிரசின் மேல் வைத்து அவளை வஸ்தியின் ஸ்தானத்திலே பட்டத்து ஸ்திரீயாக்கினான்"** (எஸ்தர் 2:17)

ஆமான் யூதர்களை அழிக்கும்படி ராஜாவின் மோதிரத்தினால் முத்திரை வாங்கினான். இதை அறிந்த எஸ்தர் யூதரை கூடிவரச் செய்து, எஸ்தரும் யூதமக்களும், அல்லும் பகலும் புசியாமலும் குடியாமலும் இரட்டுடுத்தி மூன்று நாள் உபவாசம் பண்ணினார்கள்.

இதனால் ராஜாவின் கண்களில் தயை கிடைத்தது. ராஜா ஆமானின் கையில் போடப்பட்டிருந்த தம்முடைய முத்திரை மோதிரத்தை எடுத்து மொர்தெகாயுக்கு கொடுத்தான். மேலும் ராஜா யூதர்களை காப்பாற்ற யூதருக்காக எழுதி ராஜாவின் மோதிரத்தினால் முத்திரை போடுங்கள் என்று கூறினான் (எஸ்தர் 8:8)

எஸ்தர் தம்முடைய ஜனங்களுக்காக தன் உயிரையும் பொருட்டுத்தாமல் உபவாசம் இருந்து யூத ஜனங்களை காப்பாற்றினாள்.

### தானியேலை தப்புவித்த முத்திரை மோதிரம்

**ராஜாவைத் தவிர வேறு யாரையும் வணங்கக்கூடாது என்ற தடையிருந்த பொழுதும்** (தானியேல் 6:10) **எருசலேமுக்கு நேராக பலகணிகள் திறந்திருக்க அங்கே தான் முன்பு செய்து வந்தபடியே தினம் 3 வேளையும் தன் தேவனுக்கு முன்பாக முழங்காற்படியிட்டு ஜெபம் பண்ணி ஸ்தோத்திரம் செலுத்தினான். இதையறிந்த அவர்கள் தானியேலை கொண்டுவந்து சிங்கங்களின் கெபியிலே போட்டார்கள்** (தானியேல் 6:16).

ராஜா தானியேலை நோக்கி : **"நீ இடைவிடாமல் ஆராதிக்கிற உன் தேவன் உன்னைத் தப்புவிப்பார்" என்றான். கெபியின் வாசலிலே ராஜா முத்திரை போட்டான். தானியேல் ஆண்டவரை 3 வேளை ஸ்தோத்திரம் பண்ணி ஜெபித்ததினிமித்தம் தேவன் தூதர்களை அனுப்பி சிங்கங்களின் வாயைக் கட்டிப் போட்டார்** (தானியேல் 6:22)

சிங்கம் போன்ற பிரச்சனைகள் வந்தாலும் ஜெபிக்கும் போது நமக்கு விடுதலை கிடைக்கும்.

### நம்மை முத்திரையாக

நீர் என்னை உமது இருதயத்தின் மேல் முத்திரையைப் போலவும், உமது புயத்தின் மேல் முத்திரையைப் போலவும் வைத்துக் கொள்ளும் (உன்னதப்பாட்டு 8:6மு) என்று நாம் ஆண்டவரிடம் கேட்கும் பொழுது ஆண்டவர் நம்மையும் தம்முடைய முத்திரையாக வைப்பார்.

ஆகையால் கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறது என்னவென்றால் **"செருபாபேல் என்னும் என் ஊழியக்காரனே, உன்னை நான் அந்நாளிலே சேர்த்துக் கொண்டு, உன்னை முத்திரை மோதிரமாக வைப்பேன்" என்று கர்த்தர் சொல்லுகிறார். நான் உன்னை தெரிந்து கொண்டேன் என்று சேனைகளின் கர்த்தர் உரைக்கிறார்** (ஆகாய் 2:23)

## அன்பு சகோதரனிடமிருந்து

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே,

ஆண்டவருடைய பெரிதான கிருபையால் ஜனவரி மாத ஊழியங்கள் சிறப்பாக நடைபெற்றது. நம்முடைய இரண்டாவது பணித்தளமாகிய பற்பநாதபுரத்தில் வழக்கம் போல் ஜனவரி மாதம் முதல் வாரத்தில் 3 நாள் கன்வென்ஷன் சிறப்பாக நடைபெற்றது. ஜனவரி 1ம் தேதி Bro. சுதாகர் டேவிட் அவர்களும் 2ம் தேதி சகோதரி காருண்யா மற்றும் திருமதி நளினி ஐசக் அவர்களும் 3ம் தேதி திரு சந்திரசேகர் மற்றும் திருமதி. மகேஷ்வரி அவர்களும் தேவசெய்தி அளித்து பற்பநாதபுரம் கன்வென்ஷனில் பங்கு பெற்றனர். தொடர்ந்து ஊழியங்களுக்காக ஜெபித்துக் கொள்ளுங்கள்.

## அடுத்த சாட்சி நீங்களே - பிப்ரவரி 2021

### காணாமல் போன என் மகளின் கம்மல் கிடைத்தது

கடந்த மாதம் என் மகளின் ஒரு கம்மல் தொலைந்து விட்டது. குளிப்பாட்டப்படும் போதுதான் பார்த்தோம். ஜெபத்துடன் தேடினோம். கம்மல் பாத்ரூமிலிருந்து கிடைத்தது. திருக்கு தேடியும் கிடைக்கவில்லை. காணிக்கை பொருத்தனை செய்து ஜெபித்து தேடினோம். ஆச்சரியப்படும்விதமாக திருக்கு Hallல் கிடைத்து விட்டது. தேவனுக்கே மகிமை

**- ஹெலன் பிரியா ஜோஷ்வா,** பெங்களூர்

### கேன்சர் வியாதியிலிருந்து விடுதலை

எனக்கு கேன்சர் வியாதியிலிருந்து கர்த்தர் சுகம் கொடுத்தார். 6 மாதத்திற்கு ஒருமுறை செக் பண்ண வேண்டும். ஒவ்வொரு முறையில் எனக்கு ரிசல்ட் normal என்று வரும்படி கர்த்தர் கிருபை செய்கிறார். என் இறுதி மூச்சுவரை உலக ரட்சகர் ஜெபக்குழுவோடு இணைந்து ஊழியம் செய்ய ஆண்டவர் கொடுத்த சுகத்திற்கு கோடான கோடி நன்றி.

**- செண்டு அம்மாள்,** மணிமூர்த்தீஸ்வரம்

### பதில் கொடுத்த தேவாதி தேவனுக்க ஸ்தோத்திரம்

என் மகளுக்கு ஒரு மாப்பிள்ளையும் கேட்டு வரவில்லை. ஏனென்றால் அவளுக்கு பிசாசின் தொந்தரவும் இருந்தது. இயேசுவின் ஒளிக்கு சாட்சி பொருத்தனை செய்ததால் பாம்பேயிலிருந்து ஒரு மாப்பிள்ளை பெண் கேட்டு வந்தார்கள். உடனே நான் போய் அங்கு விசாரித்தபோது மாப்பிள்ளை நல்ல பையன் என தெரியவந்தது. உடனே திருமணத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டு நல்ல முறையில் திருமணம் நடைபெற உதவிய தேவாதி தேவனுக்கு கோடி ஸ்தோத்திரம்.

**- திருமதி. ரெத்னா முத்துப்பாண்டி,** தருவை

❖❖❖❖❖❖❖❖❖

### என் மனைவிக்கு கொடுத்த சுகத்திற்கு ஸ்தோத்திரம்

என் மனைவி சாப்பிட முடியாமல் அவதிப்பட்டாள். தொண்டைக்கு கீழ் சாப்பாடு இறங்க முடியாமல் மிக அவதிப்பட்டாள். ஆனந்தம் ஜெப அறையில் சாட்சி சொல்லுவேன் என பொருத்தனை செய்ததால் என் மனைவியால் இப்பொழுது நன்றாக சாப்பிட முடிகிறது.

**- Mr. கோயில்மணி,** வசந்தாபுரம், நெல்லை-5

❖❖❖❖❖❖❖❖❖

### அலர்ஜியிலிருந்து விடுதலை

எனக்கு கடந்த 15 நாட்களாக சொறி, அரிப்பு, வீக்கம், கொப்பளம் ஆகியவை வந்து மிக அவதிப்பட்டேன். English Medicine எடுத்தும் பயனில்லை. English Medicineல் சொறி, வீக்கம் அதிகரித்ததே தவிர குறையவில்லை. உலக ரட்சகர் ஜெபக்குழு அலவலக ஊழியப் பணியினை செய்யமுடியுமா என்ற ஏக்கம் எனக்குள் இருந்தது. இறுதியாக சித்த மருத்துவரை சந்தித்து Siddha Medicineல் சரியானது. எல்லாவற்றிற்கும் மேலாக 91ம் சங்கீதத்தை சொல்லி ஜெபித்து அந்த பொல்லாத பிசாசை கட்டி ஜெபித்தோம். கொஞ்சம் கொஞ்சமாக கொப்புளங்கள் உடைத்து அரிப்பு நீங்க உதவிய தேவனுக்கு ஸ்தோத்திரம்

**- R. டேவிட் வின்ஸ்டன்,** KTC நகர், நெல்லை-11

❖❖❖❖❖❖❖❖❖

### கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம்

எங்கள் மகள் நிலா ஸ்டெஃபி - சாம் கிருபாகரன் ஆஸ்கர் திருமணம் கர்த்தரின் பெரிதான கிருபையால் ஜனவரி 14ம் தேதி சிறப்பாக நடந்தது. எல்லாவற்றையும் நேர்த்தியாகச் செய்கிற தேவன் எல்லா தேவைகளையும் அற்புதமாய் சந்தித்து வெகு சிறப்பாக நடத்தினார். கோவையிலும் சிறப்பாக வரவேற்பு நடைபெற கிருபை புரிந்தார். கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

**- திரு. & திருமதி. G. சுதாகர் டேவிட்**
உலக ரட்சகர் ஜெபக்குழு, பாளை

❖❖❖❖❖❖❖❖❖

### செயின், நெக்லெஸ் கிடைத்தது

நான் எனது மகள் திருமணம் முடிந்து வந்தபின் எனது செயினையும், நெக்லெஸையும் எங்கோ வைத்து விட்டேன். வெகுநேரம் தேடியும் கிடைக்கவில்லை. பின்பு இயேசுவின் ஒளியில் சாட்சி எழுதுவதாக பொருத்தனை செய்த சிறிது நேரத்தில் கிடைக்கும்படி கிருபை செய்தார். அவருக்கே எல்லா துதியும் புகழும் உண்டாகட்டும்.

**- திருமதி. கிரேஸ் பிரேமா**
உலக ரட்சகர் ஜெபக்குழு, பாளை

## சூழ்நிலைகள் - காஞ்சனா ஜெயதிலகர், கொடைக்கானல்

'வெண்கலக் கடையில் யானை புகுந்தாற் போல' என்பதற்குப் பதிலாய், 'பாலசந்திரன் வாய் திறந்தாற் போல' என்ற புதுமொழி கோயில்பட்டியில் ரகசியமாய் உலா வந்தது! அவர் வந்து நின்றதுமே இடம் ரகளைப்படும்!

'என்னா மாப்பிள்ளை.... இப்பவேனும் ஒழுங்கா இருக்கீங்களா. அந்த நாளுல நீங்க பண்ணாத ரவுசா?' என்ற இவரின் மேல் ஸ்தாயி நக்கலில் அனைவரும் சில அடி தள்ளியே நிற்பார்கள்!

'என்ன சுதா குட்டி 'கொரோனா' தயவுலே பத்தாவது பாஸாயிட்ட உங்கம்மா போல 'கோட்' அடிச்சிருந்தால் உனக்கும் உங்கப்பா போலொரு அப்பாவியைத் தேடி எடுத்து கல்யாணம் பண்ணி அனுப்பியிருப்போம்'

இவரது ஆரவார சிரிப்பலையில், சுதா குட்டியின் பெற்றோரோடு, மற்றவர்களும் பதறி ஒதுங்குவார்கள்!

விலகுபவர்களை இழுத்து வைத்து வம்பு வளர்ப்பார் தானே?

‘இப்படி நான் நினைவு வைத்து பேசறது ஒரு பிரியத்தாலதானே? வேறு யாருக்கு இத்தனை வண்டவாளமும் தெரியும்?’

மனைவியை ‘ஏ...விஜயா’ என்றிவர் அலறி அழைக்க, பொது இடங்களில் இருக்கும் அத்தனைப் பெண்களும் திரும்பிப் பார்ப்பார்கள்!

துடுக்குப் பெண் ஒருத்தி

‘அவங்க பி விஜயாதானே?’ என்று கேட்டதும்கூட அவருக்கு உறைக்கவில்லை.

மனைவியும் பாவம்.... சொல்லாமலில்லை.

‘ஏங்க, மெதுவாத்தான் பேசுங்களேன். இப்ப உள்ள பிள்ளைங்கள கவனிச்சா, யாருட்ட பேசுதுங்களே அவங்க மட்டுமே கேட்கறளவில், வாய் நோகாம வாயசைக்குதுங்க எவ்வளவு நாகரீகமாயிருக்குது?’

‘போடி இவளே.... கண்டுட்டா நாகரீகத்தை! மூக்குப்பேரியிலிருந்து அள்ளிச் செருகின தலையோட வந்தவ, நீ... சீப்பு, பவுடரெல்லாம் நான் வாங்கித் தந்த பிறவுதான?’

இது நிஜமில்லை என்றாலும், விஜயாவின் பேச்சு முடிந்து போனது!

அன்று சென்னை போகும் புகைவண்டியில் ஏறியவர் பேச்சில், தண்டவாளமும் அதிர்ந்தது!

‘ஏ விஜயா, தண்ணிய எடு - பழத்தை உரி’ என்று ஆரம்பித்தவர் சக பயணிகளின் மனநிலை, சூழ்நிலை ஏதும் உணராமல் தன் தர்பாரை நடத்தினார்.

‘நீங்க யாரு, பேரு, ஊரு?’ என்று ஆரம்பித்த அவரது விசாரணைப் பருப்பு ஏதும் வேகவில்லை!

முகம் சுளித்த இரு பயணிகள் தங்கள் லேப்-டாப்பை திறந்து விட, கல்லூரி மாணவி போலிருந்த பெண் மேல் பெர்த்தில் ஏறி படுத்து விட்டாள்.

விடாமல் பக்கத்து பெர்த்துகளுக்கும் போய், பாலசந்திரனின் உரத்த அரட்டை, அறிவிப்புகள் தொடர்ந்தன.

‘இதுவரை ‘கோவிட்’ தயவில் எந்த கல்யாணமும் விமர்சையாய் நடக்கலை. இது சொந்த தங்கச்சி பையனின் கல்யாணம் - அழைப்பு வந்ததும் கிளம்பியாச்சு. ஒரு வாரமேனும் சென்னையில் தங்கிட்டுத்தான் திரும்புவோம்.... கிறிஸ்மஸ் ஷாப்பிங் கூட அங்கனயே முடிச்சிடலாம்... எப்பிடி?’

பவர் ‘மாஸ்க்’ உதவியில் வாய் மூடினதோடு, கண்களையும் மூடிக் கொள்ள, இவர் மனைவி கெஞ்சினார்-

‘பேசாம படுங்களேன்....’

‘பத்து மணி நேரப் பயணம் - ஒரு கலகலப்பு வேணாம்?’ என்றவர் பிறகு விட்ட குறட்டையும் கூட ரயில் பெட்டியை மிரட்டியதுதான்!

திருமணம் முடிந்ததுமே பதறியடித்து ஊர் திரும்ப வேண்டியதாயிற்று! வந்த தகவல் அப்படி!

சுத்தமாய் கொள்ளையடிக்கப்பட்டிருந்த தன் வீட்டைப் பார்த்தவர் அக்கம் பக்கத்தாரிடம் நீதி கேட்டுப் பொறுமினார்.

‘என்னய்யா... மதியம் வந்து களவாணிப் பயலுக கள்ளச் சாவியிட்டு திறந்து, அத்தனையும் அள்ளிட்டு போயிருக்கானுவ. என்ன, ஏதுன்னு விசாரிக்கறதில்லை? எனக்கு ஒரு போன் போட்டு கேக்க வேணாமா?’

எதிர்வீட்டு முற்றத்தில் அமர்ந்திருந்த பெரியவர் சொன்னார் - ‘கேட்டோம்ப்பா சந்திரா, ஆனா வந்த பயலுங்க உங்க வீட்டு சரித்திரத்தை துல்லியமாகச் சொன்னாங்களே - யாருக்கு, எங்கே கல்யாணம் கொடுத்த வரச்சனை முதற்கொண்டு! அங்கே தேவை இருப்பதால் வீட்டு சாமானுங்க போகும்... பிறகு வரும்னு சொல்வ.....’



‘டி.வி, பிரிட்ஜ் கூடவா? நகை, புடவை, பொருள் எல்லாம் போச்சே!’

‘ஆமா சந்திரா - அவனுங்க உன் உறவா - பிறகெப்படி அத்தனை விவரமும் தெரிய வந்தது’

பிறகு பாலசந்திரனின் குரல் அமுங்கித்தான் போனது. அது விஜயாவோடு, ஊராருக்கும் நிம்மதிதான்....!

(நீதிமொழிகள் 27:14)

## 2021 பிப்ரவரி மாத வேத வினாக்கள்

வினாக்களை நன்கு வாசித்து, விடைகளை ஒரு இன்லாண்டு லெட்டரில் எழுதி அத்துடன் உங்கள் பெயர், முழு விலாசம், இயேசுவின் ஒளி பத்திரிக்கை முகவரி வரிசை எண், போன் நம்பர், தெரியப்படுத்தவும். இன்லாண்டு லெட்டரை ஒரு பக்கம் ஒட்டி, இம்மாதம் இறுதிக்குள் (28.2.2021) உங்கள் விடைகளை அனுப்பும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

**வேத பகுதி : ஒபதியா, யோனா, மீகா, நாகூம்**

**I. இருப்பிடம் எழுதுக:-**

a) கர்த்தருடைய நாள் சமீபமாய் வந்திருக்கிறது; நீ செய்தபடியே உனக்கும் செய்யப்படும்.

b) என் ஆத்துமா என்னில் தொய்ந்து போகையில் கர்த்தரை நினைத்தேன்.

c) தம்முடைய பரிசுத்த ஆலயத்திலிருக்கிற ஆண்டவரே, உங்களுக்கு விரோதமாக சாட்சியாயிருப்பார்.

d) நான் கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தேன், அவர் எனக்காக வழக்காடி என் நியாயத்தை விசாரிக்கும் மட்டும் அவருடைய கோபத்தை சுமப்பேன்.

e) உன் மேல் தீட்டானவைகளை எறிந்து உன்னைக் கனவீனப்படுத்தி உன்னை வேடிக்கையாக்கிப் போடுவேன்.

**II. நிரப்புக:-**

a) யாக்கோபு வம்சத்தார் ________ யோசேப்பு வம்சத்தார் ________ யுமாய் இருப்பார்கள்; ஏசா வம்சத்தாரோ ________ துரும்பாயிருப்பார்கள்.

b) பொய்யான ________ யைப் பற்றிக் கொள்ளுகிறவர்கள் தங்களுக்கு வரும் ________ யைப் போக்கடிக்கிறார்கள்.

c) தீர்க்கதரிசிகளின் மேல் ________ அஸ்தமித்து அவர்கள் மேல் ________ காரிருளாய்ப் போகும்.

d) அதிபதி ________ என்கிறான், நியாயாதிபதி ________ கேட்கிறான்; பெரியவன் தன் ________ யைத் தெரிவிக்கிறான்.

e) கர்த்தர் ________ மகிமையைத் திரும்பி வரப் பண்ணுவது போல் ________ மகிமையையும் திரும்பி வரப்பண்ணுவார்.

**III. வேதவசனத்தோடு பொருத்துக:-**

| | | | |
|---|---|---|---|
| a) | மகாநகரம் | - 1) | பெத்லகேம் |
| b) | பெத்ஏகேர் | - 2) | நாகூம் |
| c) | எப்பிராத்தா | - 3) | பாலாக் |
| d) | மோவாபின் ராஜா | - 4) | புலம்பல் |
| e) | எல்கோசான் | - 5) | நினிவே |

**IV. விடை எழுதுக:-**

a) உன்னை மோசம் போக்குவது எது?

b) சமுத்திரத்தையும் பூமியையும் உண்டாக்கின பரலோகத்தின் தேவனாகிய கர்த்தரிடத்தில் பயபக்தியுள்ளவன் என்று கூறியவன்?

c) சீயோனிலிருந்தும், எருசலேமிலிருந்தும் வெளிப்படுவது யாவை?
d) நெரிஞ்சிலைப் பார்க்கிலும் கடுங்கூர்மையானவன் யார்?
e) பூர்வகாலமுதல் தண்ணீர் தடாகம் போல் இருந்த பட்டணம் எது?

**- வெஸ்லி சாமுவேல்,** தூத்துக்குடி, Cell : 96009 79050

**குறிப்பு :** விடைகளை இயேசுவின் ஒளி பத்திரிக்கை அலுவலகத்திற்கே அனுப்பவும்.

## 2020 அக்டோபர் மாத விடைகள் - புலம்பல், எசேக்கியேல் 1-18 அதிகாரங்கள்

I. a) புல 3:22 b) புல 5:8 c) எசே 1:28 d) எசே 13:9 e) எசே 18:30

II. a) தண்ணீரைப் (புல 2:19) b) நம்பிக்கையோடு (புல 3:26)
c) கொள்ளை நோயால்; பட்டயத்தால் (எசே 6:12) d) கல்லான, சதையான (எசே 11:19)
e) ஆத்துமா, ஆத்துமாவும் (எசே 18:4)

III. 1) d) ஏதோம் குமாரத்தி (புல 4:21) 2) b) பூசியின் குமாரன் (எசே 1:3)
3) e) பாபிலோன் (எசே 12:13) 4) c) பெலத்தியா (எசே 11:1,13)
5) a) என் பங்கு (புல 3:24)

IV. 1) எருசலேம் (புல 2:15) 2) இரக்கமுள்ள ஸ்திரிகள் (புல 4:10)
3) இஸ்ரவேல் வம்சத்தார் (எசே 2:7) 4) கானான் தேசம் (எசே 16:3)
5) பட்டயம்; பஞ்சம்; துஷ்ட மிருகங்கள்; கொள்ளை நோய் (எசே 14:21)

**- வெஸ்லி சாமுவேல்,** தூத்துக்குடி, Cell : 9600979050

## 2020ம் ஆண்டு அக்டோபர் வேதவினா விடை எழுதியவர்கள்

**திருநெல்வேலி மாவட்டம் :** அன்னமணி ராணி, இந்திரா சுதந்திரம், D.பொன்னுத்தாய், K. பால்ராஜ், பியூலா சந்தோஷம், பியூலா ஸ்வீட் ஸ்டார், பிரிசில்லா பிரெடெரிக், சில்வியா அம்புரோஸ், சில்வியா கிறிஸ்டோபர், சகுந்தலா தவமணி, சுகந்தி நவகுமார், R. டெய்சி வில்பிரட், எபன் பெனியேல், கஸ்தூரி எலியாஸ், கிறிஸ்டி ஜோசப், கமலா மாணிக்கம், கெத்சி எபனேசர், கிரேஸ் மோசஸ், கண்மணி ஜேக்கப், கமலா கிறிஸ்டோபர், J. எபனேசர் கிரேஸ்லின் சாந்தி, ஜோஸ்னா சாம்சன், ஜெயா ரஞ்சித்சிங், ஜெஸி ஜெயக்குமார், ஜாய் மாத்யூ, ஏ.ஜீவா டேனியல் மெய்பொருள்தாஸ், ஜான் ஜெபராஜ், ஜேன் தர்மராஜ், A.ஜெப்ரி டேவிட்சன், A. ஜாய் ஆனந்தன், S. ஜாய் சந்திரகாந்தா, ஜான்ஸி ஆபிரகாம், ஜெபா நியூட்டன், ஜாஸ்மின் பாக்கியசீலி, ஹெப்சிபா மங்களராஜ், D. ஹெலன் ஸ்வீட், லலித்துரை, லலிதா தனராஜ், K.S.S.மரகதம் செல்வராஜ், மார்த்தாள் ராமசாமி, மனோ ரஞ்சிதமணி திவாகரன், மல்லிகா நவமணி, P. ராஜம்மாள், ரெஜினா மாணிக்கம், ரெஜினா நோபுள், ரோஸ்லின் தாமஸ்

**தூத்துக்குடி மாவட்டம் :** G. அன்னசீலி ஞானசீலன், பிரேமா ராஜ்குமார், S. பிரேமா, எஸ்தர் ராணி எபனேசர், ஹெலன் ஆசீர், மனோ தனராஜ், D. ஜெயா பாக்கியம், குளோரி கற்பகவல்லி, R. கோயில்ராஜ், P. ராபர்ட் சுந்தர்சிங், செல்வராணி சந்திரகுமார், S. சவரியம்மாள், S. சாந்தகுமாரி, D. தனபால், தங்கம் ஜோஸப், விஜயா சார்லஸ், J. விரோனிக்கா

**திருச்சி :** கிரேஸ் பென்னட், கிரேஸ்லெட் ஜெசுபால், மீரா பாண்டியன், ராஜம்மாள் ஞானசிங், செலினா திலீப், சுதந்திரதேவி, ஜெஸி சாமுவேல், விமலா குழந்தைசாமி, வில்லியன் ஜோசப், மனோன்மணி பால்பாண்டியன், ஜாய் ஜோஸப், பெட்ரீஸியா தனராஜ்

**மதுரை மாவட்டம் :** ஹெலன் திலக், ஜோதிமணி அப்பாத்துரை, ஜாண்சன் எபனேசர்,வில்லி ஜான், மேரி ஜெபராஜ், ராணி ஸ்டேன்லி பால், சம்பு ஜெயம், தெல்மா ஸ்டான்லி

**விருதுநகர் மாவட்டம் :** M. எஸ்தர் சாமுவேல், கெத்ஸி தம்புராஜ், M. தமிழரசி மனோகரன், ரோஸ்லின் கமலாபாய், S.P. சரோஜா

**சேலம் மாவட்டம் :** எஸ்தர் செல்வராணி, Dr. இவாஞ்சலின் ஜோன்

**கோயம்புத்தூர் மாவட்டம் :** ஆலிவ் ஜெயபாலன், ராஜவடிவு, ஷீலா டேவிட், கீதா பிரகாசா



**சென்னை மாவட்டம் :** அருள்மாரன் மோசஸ், எலிசபெத் சில்வியா மார்ட்டின், ஏஞ்சல் ஜாண்சன், ஈடித் ஜெகநாதன், ஞானசெல்வி மோசஸ், ஹில்டா ஜெயச்சந்திரன், ஹேமா அஜித், T. ஜெயபால், ஜெஸி தம்புராஜ், கமலா பால்ராஜ், கமலா சற்குணம், கிரேஸ் மேன்யல், கிருபா செல்வின், லதா எஸ்றா, லில்லி ஜான்சன், லீலா கோபி, லவினியா ராஜா, S.மெர்லின், மஞ்சுளா விஷ்வம், ஃபானி பரஞ்ஜோதி, ராய் டேவிட், ராணி சாமுவேல்ராஜ், ராஜகுமாரி ராஜாசிங், ரூபவதி நோபிள், சந்திரலேகா மார்ட்டின், சௌந்தரம் சாலொமோன், சகாயராஜ் லில்லி சகாயராஜ், செல்வி அமிர்தராஜ், சௌந்தரா தவசிங், தமினா சார்லஸ், உஷா ஜான், விஜி டேனியல், வசந்தா சாமுவேல், ஜாஸ்மின் ஞானதாஸ்

**மும்பை :** A.R. அங்கப்பன், அன்னபூரணம் ஜெயச்சந்திரன், ஹில்டா தர்மராஜ், லீலா ஏர்னஸ்ட், ஜெபராணி சாம்சன்

**இதர மாவட்டங்கள் :** பியூலா பாண்டியன் (காஞ்சி), பிலோமினா ஜான் (பட்டுக்கோட்டை), பாரதி தியாகராஜ் (தஞ்சாவூர்), பியூலா ஜெசுராஜன், கிறிஸ்டி ஹெர்பர்ட் (கன்னியாகுமரி), சாந்திபாய், O. ஹெலன், ஜெம் ரிச்சர்ட் (ஓசூர்), ஜாய் ரத்தினராஜ் (வேலூர்), ஜரிஸ் மோகன்ராஜ், ஜரின் ஜான்ரோஸ், D. தம்புராஜன் (பட்டுக்கோட்டை), டயானா திலகன் (நாகர்கோவில்), சந்திரகுமாரி மோகன் (கன்னியாகுமரி), சிசிலி செல்வன் (கடலூர்), ரெத்னா ராஜ்குமார்

**பிற மாநிலம் :** செல்வம் ஜெயராஜ் (பிலாய்)

## வேத அறிவுத் திறனுக்குச் சவால் - பிப்ரவரி 2021

வேதபகுதி : **ஆதியாகமம்** **ஸ்டெல்லா T. சீலன்,** சென்னை

கொடுக்கப்பட்டுள்ள புதிருக்கான விடையை கண்டுபிடித்து (30 வயதுக்குட்பட்டவர்கள் மட்டும்) இம்மாத இறுதிக்குள் விடைகளை இயேசுவின் ஒளி பத்திரிக்கை அலுவலகத்திற்கு எழுதி அனுப்பவும்.

1) பிறக்குமுன்னே கர்த்தரால் பெயர் கொடுக்கப்பட்ட இருவர் யார்?
2) தேவனால் மறுபெயர் கொடுக்கப்பட்ட மூவர் யார்? கொடுக்கப்பட்ட பெயர்கள் என்ன?
3) எகிப்தின் ராஜாவால் மறுபெயர் கொடுக்கப்பட்டவன் யார்? பெயர் என்ன?
4) தன் குமாரர்களுக்கு பெயர்க் காரணம் சொல்லி, பெயரிட்டவள் யார்?
5) தன் இரண்டு குமாரருக்கும் பெயர்க் காரணத்துடன் பெயரிட்டவன் யார்?
6) தன் மனைவிக்குப் பெயரிட்டவன் யார்?
7) தன் மரண காலத்தில் தன் குமாரனுக்குப் பெயரிட்டவள் யார்? அது எவ்வாறு மாற்றப்பட்டது?
8) பொறாமையின் காரணத்தால், தங்கள் சகோதரனை என்ன பெயர் சொல்லி அழைத்தனர்? சகோதரன் யார்?
9) சிவப்புக் கூழுக்காக பெயர் மாற்றம் பெற்றவன் யார்?
10) தன் கடைசி நாட்களில், தன் குமாரருக்கு ஒப்புமையுடன் கூடிய பெயர் கொடுத்தவன் யார்?

### டிசம்பர் 2020 - சரியான விடைகள்

1) புரட்டுநாவுள்ளவன் (நீதி 17:20) 2) மரணத்துக்கு (நீதி 11:19)
3) துன்மார்க்கனுடைய வாய் (நீதி 15:28) 4) துன்மார்க்கன் (நீதி 14:32)
5) செம்மையானவர்களுக்கு (நீதி 14:32) 6) தீமை (நீதி 11:27)
7) ஞானமுள்ளவன் (நீதி 14:16) 8) நன்மைக்கு தீமை செய்கிறவன் (நீதி 17:13)
9) கர்த்தருக்கு பயந்தவன் (நீதி 19:23) 10) மூடருக்கு (நீதி 13:19)

### டிசம்பர் 2020 - சரியான விடைகள் எழுதியவர்கள்

M. பமிலா லக்ஸி, J. விரோனிக்கா, J. ஜோயல் சாம்ராஜ், S.பிரியதர்ஷினி,
P. ராபர்ட் சுந்தர் சிங், M. லின்சி ஜெரேமிலினி அல்டோரா, T. ஜூலியட், M. கிறிஸ்டலின் பெடோரா J.ஜெனிஃபர், A. டேனியோ ஸ்டெரெசி,J. ஜெனிட்டா செல்வின்

"YESUVIN OLI" January 2021 Posted at H.P.O. Palayamkottai

BP 627002 30.01.2021
2875 00964802



भारत INDIA POSTAGE ₹4.00

P850563

## BANK DETAILS

A/C Name : SOW PRAYER FELLOWSHIP
A/C No. : 2117692790
Bank : Central Bank of India Branch : Samathanapuram - 627 002.
Branch Code : 03155 IFSC Code : CBIN0283155

பங்கு பெறுக! பயன் பெறுக!

### உலக ரட்சகர் ஜெபக்குழு

## 45வது ஆண்டு ஸ்தோத்திரக் கூட்டம்

நாள் : **2021 பிப்ரவரி 21ம் நாள் ஞாயிற்றுக்கிழமை**
காலை 11 மணி முதல் மாலை 3 மணி வரை

இடம் : **ஆனந்தம் ஜெப அறை**
1பி, மெயின் ரோடு, மிலிட்டரி லைன்ஸ்,
பாளையங்கோட்டை

இனிய பாடல், சிறப்பு செய்தி, விசேஷித்த ஜெபம் உண்டு. கூட்ட முடிவில் வியாதியஸ்தர்களுக்காகவும், குழந்தை இல்லாதவர்களுக்காகவும், பிரச்சனை உள்ளவர்களுக்காகவும் பாரத்துடன் ஜெபிக்கப்படும். ஜெபிக்கப்பட்ட வாழைப்பழங்கள் வழங்கப்படும்.

**உலக இரட்சகர் ஜெபக்குழு**
4A/2C, தேவலோகத் தெரு, மிலிட்டரி லைன்ஸ், பாளையங்கோட்டை, தமிழ்நாடு - 627 002.

நமது ஊழியங்களுக்காக காணிக்கை, பத்திரிக்கை சந்தா, M.O., செக், டிராப்ட் அனுப்புகிறவர்கள் SOW PRAYER FELLOWSHIP என்ற பெயரில் எடுக்கப்பட்டு தொடர்பு முகவரிக்கு அனுப்பவும்.

**அலுவலக நேரம் : காலை 10.00 மணி முதல் மாலை 2.00 மணி வரை**

**தொடர்பு முகவரி :**

**G. சுதாகர் டேவிட்**, S/o. Mr. (Late) குருபாதம், உலக இரட்சகர் ஜெபக்குழு
4A/2C, தேவலோகத் தெரு, மிலிட்டரி லைன்ஸ், பாளையங்கோட்டை, தமிழ்நாடு - 627 002.

**If undelivered please return to :**

**YESUVIN OLI**
4A/2C, Develoga Street, Military Lines
Palayamkottai - 627002
Tirunelveli District, Tamilnadu.
Phone : 0462-2579211

*To,*

CHE 61Mrs.Sugirtham John
42/14, Viyasar Street
Tambaram East
Chennai – 600055

Owned and Published by SOW Prayer Fellowshi
Palayamkottai, Printed by G. Duraisamy at Pri
Orient, 21st Street, Shanthi Nagar, Palayamkotta
Tirunelveli - 627 002 and published from the sam
address. Editor : Mrs. Roxana Gurubatham